ஸத்ய:' என்ற விஷயத்தில் மூலமாயுள்ள ப்ரமாணம் தேடப்படவேண்டும். 'ஊர்த்வம் தசாஹாத் ச்ருத்வா ஏகராத்ரம்' என்ற சங்க வசநம் ப்ரமாணமாய்ச் சொல்லப்பட்டுள்ளதே எனில் அதில் அதிக்ராந்த த்ரிராத்ராசௌசம் ப்ரகிருதமல்ல. விக்ஞாநேச்வரர் முதலியவர்களும் வேறு விதமாய் வ்யாக்யாநம் செய்திருக்கின்றனர்- 'இந்த ஏகராத்ராசௌசம் ஸபிண்டர்களுக்கு, 6-மாதங்களுக்கு மேல் 9-மாதங்கள் வரையில்; முன் சொல்லிய ஸத்யச்சௌசமோ எனில் 9-மாதங்களுக்குமேல் என்று அறியவும்' என்று. சந்த்ரிகை முதலியதிலும் 'த்ரிராத்ராத்யாசௌசிகளுக்குக் கால சேஷத்தால் சுத்தி. கால சேஷமில்லாவிடில் ஸத்யச்சௌசம்' என்றுள்ளது.

यत्तु पक्षिणीविषये – अतीते पक्षिणीकाले दशाहाभ्यन्तरश्रुतौ । दिवा वा यदि वा रात्रावेककालेन शुध्यति इति स्मृत्यन्तरवचनं सङ्ग्रहकारेण प्रमाणमुक्तम्, तदपि चन्द्रिकास्मृतिरत्नमाधवीय विज्ञानेश्वरीयादि निबन्धनेषु मन्वादिषु चादर्शनाद्विचारणीयम् । तथा दीपिकायाम् – मातापित्रोरघेऽतीते श्रुत्वाऽघं दशवासरम् । त्रिरात्रपक्षिण्येकाहेष्वतीतेष्वाप्लवो भवेत् इति । मनुः – निर्दशं ज्ञातिमरणं श्रुत्वा पुत्रस्य जन्म च । सवासा जलमाप्लुत्य शुद्धो भवति मानवः इति । ज्ञातिशब्देनात्रानुपनीत एवोच्यते । उपनीतमरण एवम् । उपेते विषमं वृत्ते तस्मिन्नेवातिकालजम् इति व्याघ्रेणातिक्रान्ताशौचविधानात् । दशाहादूर्ध्वं पुत्रजन्मश्रवणे पितुरेव स्नानम् । जन्मनि सपिण्डानामत्याशौचं नास्ति । नाशौचं प्रसवस्यास्ति व्यतीतेषु दिनेष्वपि इति देवलस्मरणात् ।

ஆனால்-'பக்ஷிணீ காலமதீதமானால், 10-நாட்களுள், பகலில் கேட்டாலும், இரவில் கேட்டாலும் ஒரு காலத்தால் சுத்தன் ஆகிறான்' என்ற ஸ்ம்ருத்யந்தர

வசநத்தை ப்ரமாணமாக ஸங்க்ரஹகாரர் சொல்லியருக்கின்றுரே எனில், அந்த வசநம் சந்த்ரிகா, ஸ்ம்ருதிரத்நம், மாதவீயம், விஜ்ஞாநேச்வரீயம் முதலிய நிபந்தனங்களிலும், மன்வாதி ஸ்ம்ருதிகளிலும் காணப்படாததால் விசாரிக்கப்படவேண்டும். அவ்விதம், **தீபிகையில்:-** மாதா பிதாக்களின் ஆசௌசத்தைப் பத்து நாட்களுக்குப் பிறகு கேட்டால் 10-நாட்களாசௌசம். 3-நாட்கள் ஆசௌசம், பக்ஷிண்யாசௌசம், ஒரு நாளாசௌசம் இவைகளை அதீதமாகக் கேட்டால் ஸத்ய: ஸ்நாநம் மாத்ரம்.**மனு:-** 10-நாட்களுக்குமேல் ஜ்ஞாதி மரணத்தைக் கேட்டாலும், புத்ர ஜநநத்தைக் கேட்டாலும், ஸசேல ஸ்நாநத்தால் சுத்தனுகிறுன்'. இங்கே ஜ்ஞாதி சப்தத்தால் அநுபநீதன் சொல்லப்படுகிறுன். உபநீத மரணத்தில் அதிக்ராந்தாசௌசத்தை வ்யாக்ரர் விதித்திருப்பதால். பத்து நாட்களுக்கு மேல் புத்ர ஜநநத்தைக் கேட்டால் பிதாவுக்கு மட்டில் ஸ்நாநம். பிறப்பில் ஸபிண்டர்களுக்கு அதிக்ராந்தா சௌசமில்லை. 'ப்ரஸவத்தில் அதிக்ராந்தா சௌசம் கிடையாது என்று தேவல ஸ்ம்ருதி கூறுகிறது.

तथा च सङ्ग्रहे— पित्रोर्भ्रातुर्भवेन्नान्येष्वनुपेतात्यये त्वघम्। पितुः स्नानं तदन्येषां न च तत्सूतकात्यये इति । तदन्येषाम् - पितृव्यतिरिक्तानां सपिण्डानाम्, न च तत् - स्नानमपि नास्तीत्यर्थः। स्मृत्यर्थसारे तु - स्वादेशान्तरादर्वाग्देशमृतौ स्वाशौचकालादूर्ध्वं श्रुतायां तद्देशं विंशतियोजनादिकं त्रिधा विभज्याद्ये च समीपभागे त्रिरात्रम्। ततो दूरभागे पक्षिणी, ततो दूरभागे त्वेकाहम् । एवं देशं पर्यालोच्य यत्राल्पाशौचम्, तदेव ग्राह्यम्। अत्राघाहानि न वर्धयेत्, 'न वर्धयेदघाहानि प्रत्यूहेन्नाग्निषु क्रियाः' इति मनुस्मरणात् । लघुकल्पसम्भवे गुरुकल्पाश्रयेणाघवानघाहानि न वर्धयेत्। लघुकल्पमाश्रितोऽपि वैतानिकाग्निषु न प्रत्यूहेत् - विहन्यात् इति मनुवचनार्थः ।

ஸங்க்ரஹத்தில் :- அநுபநீத மரணத்தில், மாதா பிதாக்களுக்கும், ப்ராதாவுக்கும் அதிக்ராந்தா சௌசமுண்டு. ஜநநாசௌசம் அதிக்ராந்தமானால் பிதாவுக்கு ஸ்நாநம் மட்டும். மற்ற ஸபிண்டர்களுக்கு ஸ்நாநமுமில்லை. ஸ்ம்ருத்யர்த்த ஸாரத்திலே :- தேசாந்தர ம்ருதியைத் தனது ஆசௌசகாலத்திற்குப் பிறகு கேட்டால் அந்தத் தேசத்தின் வ்யவதாநத்தை 20 யோஜனைக்கு மேலுள்ளதை 3- பாகங்களாகப் பிரித்து முதலானதான ஸமீப பாகத்திலானால் 3-நாட்கள். அதைவிட தூர பாகத்தில் பக்ஷிணீ, அதைவிட தூர பாகத்திலானால் ஒரு நாள். இவ்விதமாலோசித்து எதில் அல்பாசௌசமோ அதையே க்ரஹிக்கவும். ஆசௌச திநங்களை அதிகப்படுத்தக் கூடாது. மனு - 'நவர்த்தயேத் + க்ரியா:' என்று சொல்லியிருப்பதால். லகுவான கல்பம் ஸம்பவித்தால் பெரிய கல்பத்தை ஆச்ரயித்து ஆசௌச தினங்களை வ்ருத்தி செய்யக் கூடாது. லகு கல்பத்தை ஆச்ரயித்தும் ச்ரௌதாக்னிகளில் விக்னத்தைச் செய்யக் கூடாதென்பது மனு வசநத்தின் பொருள்.

देशान्तरलक्षणयुक्तदेशान्तरस्थे मृते स्वाशौचकालादूर्ध्वं श्रुते सपिण्डानां सचेलस्नानम्, न त्रिरात्रादीति । तथा च पराशरः - देशान्तरे मृतः कश्चित्सगोत्रः श्रूयते यदि । न त्रिरात्रमहोरात्रं सद्यः स्नात्वा शुचिर्भवेत्' इति । याज्ञवल्क्योऽपि— 'देशान्तरमृतिं श्रुत्वा क्लीबे वैखानसे यतौ । मृते स्नानेन शुध्यन्ति गर्भस्रावे च गोत्रिणः इति । अत्र विज्ञानेश्वरः — 'यस्तु नद्यादिव्यवहिते देशान्तरे मृतः, तत्सपिण्डानां दशाहादूर्ध्वं मासत्रयादर्वागपि सद्यः शौच'मिति ।

தேசாந்தர லக்ஷணத்துடன் கூடிய வேறு தேசத்திலுள்ளவனுடைய ம்ருதி, தனது ஆசௌச காலத்திற்குப் பிறகு கேட்கப்பட்டால், ஸபிண்டர்களுக்கு ஸசேல ஸ்நாநம். த்ரிராத்ரம் முதலியதில்லை. அவ்விதமே,

பராசரர் :- தேசாந்தரத்திலுள்ள ஸபிண்டனின் ம்ருதி கேட்கப்பட்டால் த்ரிராத்ரம், ஒரு நாள் என்ற ஆசௌசமில்லை. ஸத்ய: ஸ்நாநத்தால் சுத்தி. யாக்ஞவல்க்யரும் :- தேசாந்தரத்திலுள்ள ஸபிண்டனின் ம்ருதியைக் கேட்டால் ஸ்நாநத்தால் சுத்தி, நபும்ஸகன், வைகாநஸன், யதி, கர்ப்பஸ்ராவம் இவைகளிலும் ஸபிண்டர்களுக்கு ஸ்நாநத்தால் சுத்தி. இங்கே விக்ஞாநேச்வரர் - 'எவன் நதீ முதலியவைகளால் குறுக்கிடப்பட்ட வேறு தேசத்தில் மரித்தானோ, அவன் ம்ருதியில் ஸபிண்டர்களுக்கு 10-நாட்களுக்கு மேல் 3-மாதங்களுக்குள்ளும் ஸ்நாநம் மட்டில். (ஆசௌசமில்லை) என்றார்.

षडशीतौ—ज्ञातेर्मृतौ यदाशौचं दशाहात्तु बहिः श्रुतौ । एकदेश इदं प्रोक्तं स्नात्वा देशान्तरे शुचिः इति । देशान्तरलक्षणमाह बृहस्पतिः — महानद्यन्तरं यत्र गिरिर्वा व्यवधायकः । वाचो यत्र विभिद्यन्ते तद्देशान्तरमुच्यते । देशान्तरं वदन्त्यन्ये षष्टियोजन-मायतम् । चत्वारिंशद्वदन्त्यन्ये त्रिंशदन्ये तथैव च इति । योजनलक्षणं माधवीयेऽभिहितम् — तिर्यग्यवोदराण्यष्टावूर्ध्वं वा व्रीहयस्त्रयः । प्रमाणमङ्गुलस्योक्तं वितस्तिर्द्वादशाङ्गुलः ॥ वितस्तेर्द्विगुणोऽरत्निस्तस्मात् किष्कुस्ततो धनुः । धनुः सहस्रे द्वे क्रोशश्चतुष्क्रोशं तु योजनम् इति ।

ஷடசீதியில் :- 10-நாட்களுக்குமேல் ஜ்ஞாதி மரணாசௌச ச்ரவணத்தில் எந்த ஆசௌசம் சொல்லப் பட்டதோ, அது ஒரே தேசத்திலிருப்பவருக்குத்தான். தேசாந்தர ம்ருதி விஷயத்தில் ஸ்நாநத்தால் சுத்தி. தேசாந்தர லக்ஷணத்தைச் சொல்லுகிறார் ப்ருஹஸ்பதி :- மஹாநதீ நடுவிலிருந்தாலும், பர்வதம் நடுவிலிருந்தாலும், பாஷைகள் பேதித்தாலும் தேசாந்தரமெனப்படுகிறது. 60-யோஜனை தூரத்திற்கப்பாலுள்ளதைத் தேசாந்தரம் என்கின்றனர் சிலர். 40 யோஜனை தூரமென்று சிலர்.

*30-யோஜனை தூரமென்று சிலர். யோஜந லக்ஷணம்* **மாதவீயத்தில்** *சொல்லப் பட்டுள்ளது. :- யவதான்யத்தின் நடுவின் சுற்றளவு 8-கொண்டது, அல்லது நெல் தான்யத்தின் நீட்டளவு 3- கொண்டது ஒரு அங்குலமெனப்படும். 12-அங்குலம் ஒரு விதஸ்தி. 2-விதஸ்தி ஒரு அரத்னி. 2- அரத்னி ஒரு கிஷ்கு. 2-கிஷ்கு ஒரு வில். 2000-வில் கொண்டது ஒரு க்ரோசம். 4-க்ரோசம் கொண்டது ஒரு யோஜனம் என்று.*

स्मृत्यन्तरे—भाषाभेदो महानद्या व्यवधानमथाद्रिणा । त्रिंशद्योजनभेदो वा प्रत्येकं देशभेदनम्' इति । महानद्य उक्ता नृसिंहपुराणे—गङ्गा यमुना गोदावरी तुङ्गभद्रा कावेरीत्येता महानद्यः इति । वामनपुराणेऽपि— गोदावरी भीमरथी कृष्णवेणी सरस्वती । तुङ्गभद्रा सुप्रयोगा सिंहा कावेरि रेविका । दुग्धोदा नलिनी रेवा वारिसीता वलस्वना । महा अपि महानद्यः सह्यमूलाद्विनिर्गताः' इति । महा अपीति परिगणिताभ्योऽन्या याः कश्चिद्विस्तारवत्यः ता अपि महानद्य इत्यर्थः । एवं च महानद्या दक्षिणकूलमुत्तरकूलं च परस्परापेक्षया देशान्तरं भवति ।

**மற்றொரு ஸ்ம்ருதியில்** *:- பேசும் பாஷையின் பேதம், அல்லது மஹாநதி குறுக்கிலிருப்பது, அல்லது மலையினுல் மறைப்பு, அல்லது முப்பது யோஜனை தூரமிருப்பது தேச பேதத்திற்குக் காரணமாகும். மஹாநதிகள் சொல்லப்பட்டுள்ளன,* **ந்ருஸிம்ஹ புராணத்தில்** *:- கங்கா, யமுநா, கோதாவரீ, துங்கபத்ரா, இவை மஹாநதிகள் என்று வாமன புராணத்திலும் கோதாவரீ, பீமரதீ, க்ருஷ்ண வேணீ, ஸரஸ்வதீ, துங்கபத்ரா, ஸுப்ரயோகா, ஸிம்ஹா, காவேரீ, ரேவிகா, துக்தோதா, நளிநீ, ரேவா, வாரிஸீதா, வலஸ்வநா மஹாநதீ என்ற இவைகள் மஹாநதிகள். சொல்லப்பட்ட இவைகளைத் தவிர்த்து, விஸ்தாரமுள்ளவைகளும், ஸஹ்ய மலையினடியிலிருந்து*

வெளிவந்துள்ள நதிகளும் மஹாநதிகளேயாம். இவ்விதமிருப்பதால், மஹாநதியின் தென் கரையும், வட கரையும் பரஸ்பரம் தேசாந்தரமென்கிறது.

यथोक्तं बृहन्मनुना — देशनाम नदीभेदो निकटे यत्र वै भवेत्। तेन देशान्तरं प्रोक्तं स्वयमेव स्वयंभुवा इति । देशनामानि अङ्गवङ्गकलिङ्गादीनि। नदीभेदो नदीविशेषः । महानदीति यावत्। एवमुक्तमतिक्रान्ता शौचं मातापितृव्यतिरिक्तसपिण्डविषयम् । मातापितृविषये तु सन्निहितदेशे देशान्तरे च दशरात्रमेव । तत्र पैठीनसिः — पितरौ चेन्मृतौ स्यातां दूरस्थोऽपि हि पुत्रकः । श्रुत्वा तद्दिनमारभ्य दशाहं सूतकी भवेत् इति । चन्द्रिकायामिदं व्याख्यातम् - श्रुत्वेत्यत्र तु ऊर्ध्वमिति शेषो द्रष्टव्यः । ततश्च दशरात्रमध्ये तु वार्ता श्रवणे पुत्रस्यापि तच्छेषेणैव सपिण्डान्तरवच्छुद्धिः इति।

**ப்ருஹன்மனு** :- "தேசத்தின் பெயர் பேதித்தாலும், ஸமீபத்தில் நதிபேதமிருந்தாலும் தேசாந்தரமாகின்றது என்றார் ஸ்வயம்பூ ஸ்வயமாகவே". தேச நாமங்கள் = அங்கவங்க களிங்காதிகள். நதீ பேதம் - மஹாநதீ. இவ்விதம் சொல்லிய அதிக்ராந்தா சௌசம் மாதா, பிதாக்கள் தவிர்த்த ஸபிண்டர் விஷயத்தில், மாதா பித்ரு விஷயத்திலோ, ஸமீப தேசத்திலானாலும், தேசாந்தரத்திலானாலும் 10-நாட்களா சௌசமே. அதில். **பைடீநஸி** :- "மாதா பிதாக்கள் மரித்தால், புத்ரன் தூர தேசத்திலிருந்தாலும் கேட்டது முதல் பத்து நாட்களா சௌச முள்ளவனாவான்' என்றார். சந்த்ரிகையில் இதற்கு வ்யாக்யானம் - கேட்டால் என்பதில் 'பிறகு' என்று சேர்க்க வேண்டும். அதனால், பத்து நாட்களுள் கேட்டால், புத்ரனுக்கும் மீதியுள்ள தினங்களாலேயே மற்ற ஜ்ஞாதிகளுக்குப்போல சுத்தி' என்றுள்ளது.

षडशीतौ— देशकालादिभेदेऽपि मातापित्रोर्मृतिश्रुतौ । श्रवणादि दशाहं स्यान्निर्देशत्वमिति स्थितिः इति ।

ஷடசீதியில் :- தேச பேதமிருந்தாலும், காலபேதமிருந்தாலும், மாதா பித்ரு மரணத்தைப் புத்ரன் கேட்டால் கேட்ட திநம் முதல் பத்து நாட்களா சௌச மனுஷ்டிக்க வேண்டும். அதிக்ராந்த விஷயத்தில் இது நிர்ணயம்.

स्मृत्यर्थसारे – मातापितृमरणे दशाहादेरूर्ध्वं संवत्सरादूर्ध्वमपि पुत्रः श्रुतदिवसमारभ्य दशाहमाशौचं कुर्यादुदकपिण्डादि च । पत्न्या अपि दशाहम्, 'दशाहं पुत्रभार्ययोः इति पैठीनसिवचनात् । महागुरुमरणे दूरदेशेऽप्यतीतेऽब्देऽप्यार्द्र वस्त्रोपवासिना तथैवाशौचादिकं कार्यम् । संवत्सरेऽतीते मातुः सपत्न्या मरणे पुत्रस्य त्रिरात्रम् । सपत्न्योः परस्परं चैवम् इति । स्मृत्यन्तरे — यत्र कुत्र स्थितः पुत्रः श्रुत्वा पितृविपर्ययम् । ज्ञात्वा तद्दिनमारभ्य दशाहं सूतकी भवेत् इति ।। अन्यत्रापि — मुख्यकर्ता विदेशस्थो मातापित्रोर्मृतौ यदि । संवत्सरे व्यतीतेऽपि कुर्यात् प्रेतक्रियां पुनः इति ।

ஸ்ம்ருத்யர்த்தஸாரத்தில் :- மாதா பித்ரு மரணத்தில், பத்து நாள் முதலியதற்கு மேலும், வர்ஷத்திற்கு மேலும் புத்ரன் கேட்டால், கேட்ட தினம் முதல் பத்து நாட்களா சௌசமனுஷ்டிக்கவும். உதக பிண்டாதி தானத்தையும் செய்யவும். பத்னிக்கும் பத்து நாட்களா சௌசமே. 'புத்ரன் பார்யை இவர்களுக்குப் பத்து நாள்' என்று பைடீநஸி வசனத்தால். மஹாகுரு மரணத்தில் தூர தேசத்திலாகினும், ஒரு வர்ஷம் சென்றதாகினும், ஈர வஸ்த்ரம், உபவாசம், ஆசௌசம் இவைகளை அநுஷ்டிக்க வேண்டும். ஒரு வர்ஷம் சென்ற பிறகு, மாதாவின் ஸபத்நீயின் மரணத்தைக் கேட்டால் புத்ரனுக்கு மூன்று நாட்களா சௌசம். ஸபத்நீகளுக்கும் பரஸ்பரமிவ்விதம்.' என்றுள்ளது.

**மற்றொரு ஸ்ம்ருதியில் :-** புத்ரன் எங்கிருந்தாலும் மாதா பித்ரு ம்ருதியைக் கேட்டால், கேட்ட திநம் முதல் பத்துநாட்கள் ஆசௌசியாக வேண்டும். **மற்றோரிடத்தில் :-** முக்ய கர்த்தாவான புத்ரன் விதேசத்திலிருந்து மாதா பித்ரு ம்ருதியைக் கேட்டால் ஒரு வர்ஷமதிக்ரமித்த பிறகும் ப்ரேத க்ரியையைச் செய்ய வேண்டும்.

दक्षः - महागुरुनिपाते तु आर्द्रवस्त्रोपवासिना । अतीतेऽब्देऽपि कर्तव्यं प्रेतकार्यं यथाविधि इति । संवत्सरादूर्ध्वमपि प्रेतकार्यम् - आशौचोदकदानादि कार्यमित्यर्थः । चन्द्रिकायाम् - महागुरुनिपाते इत्यत्र महागुरुशब्देन माता चोच्यते । न पुनः पितैव । द्वौ गुरू पुरुषस्येह पिता माता च धर्मतः । तयोर्गुरुः पिता तावन्माता गुरुतरा स्मृता इति मातुरपि गौरवातिशयस्मरणात् इति । विज्ञानेश्वरः - यस्तु पिता पुत्रानुत्पाद्य वेदार्थं ग्राहयित्वा वृत्तिं च विदधाति, तस्य महागुरुत्वादुपरमे द्वादशाहम् इति ।

**தக்ஷர் :-** மஹா குருவின் ம்ருதியிலோவெனில் ஒரு வர்ஷம் அதீதமானாலும், ஈர வஸ்த்ரம், உபவாஸம் இவைகளுடையவனாய் விதிப்படி ப்ரேத கார்யத்தைச் செய்ய வேண்டும். வர்ஷத்திற்குப் பிறகும் ப்ரேத கார்யம் - ஆசௌசம் உதகதானம் முதலியது செய்யப்பட வேண்டும் என்று பொருள். **சந்த்ரிகையில் :-** 'மஹா குரு நிபாதே' என்ற இடத்தில் மஹா குரு ஶப்தத்தால் மாதாவும் சொல்லப்படுகிறாள். பிதாமட்டில் அல்ல. 'புருஷனுக்குப் பிதா மாதா என்ற இருவரும் குருக்கள். தர்ம சாஸ்த்ரத்தால். அவ்விருவருள் பிதா குருவெனப்படுகிறான். மாதா குருதரா எனப்படுகிறாள்' என்று மாதாவுக்கும் அதிக கௌரவம் சொல்லப்பட்டிருப்பதால், என்றுள்ளது. **விக்ஞாநேச்வரர்** எந்தப் பிதா புத்ரர்களைப் பெற்று, வேதார்த்தங்களையும் கற்பித்து, வ்ருத்தியையும் செய்விக்கின்றானோ அவன் மஹாகுருவாகையால் அவனது ம்ருதியில் 12-நாட்களாசௌசம்.

यत्तु स्मृत्यन्तरे— पिता पितामहश्चैव ज्येष्ठश्च प्रपितामहः। यश्चोपनीय सकलं वेदमध्यापयेत् स च। महागुरव इत्येते पञ्च प्रोक्ता मनीषिभिः इति, तत् पित्रादीनां पञ्चानामब्दादूर्ध्वमपि यथाविधि प्रेतकार्यं कर्तव्यमित्येवं परम्। न पुनस्तेषामुपरमे द्वादशाहाशौच-प्राप्त्यर्थम्। दशमं पिण्डमुत्सृज्य रात्रिशेषे शुचिर्भवेत् इति स्मरणात्। पितरि प्रोषिते प्रेते पुत्रो देशान्तरं गतः। कृतक्रिये त्रिरात्रं स्याद्दशाहमकृतक्रिये इति यत् कृतक्रिये त्रिरात्रविधानम्, तत् कनिष्ठपुत्रविषयम्। ज्येष्ठस्य तु कृतक्रियेऽपि पितरि दशाहं सूतकं भवेत्। दद्यात्तिलोदकं पिण्डं सपिण्डीकरणं पुनः' इति दशाहविधानात्कृतस्यापि सपिण्डीकरणस्य पुनः करणविधानाच्च ज्येष्ठविषयत्वमस्यावगम्यते।

மற்ெறாரு ஸ்ம்ருதியில் :- "பிதா, பிதாமஹன், ஜ்யேஷ்டன், ப்ரபிதாமஹன், உபநயநம் செய்து ஸகலமான வேதத்தையும் கற்பித்தவன் எவனோ அவன் என்ற இந்த ஐந்துபேர்களும் மஹா குருக்கள் என்று வித்வான்களால் சொல்லப்பட்டனர்" என்ற வசநமுள்ளதே எனில், அது பிதா முதலிய ஐந்து பேர்களுக்கும்; வர்ஷத்திற்குப் பிறகும், விதிப்படி ப்ரேதகார்யம் செய்யப்பட வேண்டும் என்பதற்காகவே. அவர்கள் ம்ருதியில் பன்னிரண்டு நாட்கள் ஆசௌசம் விதிப்பதற்கல்ல. 'பத்தாவது நாளில் பிண்டதாநம் செய்து மறுநாளில் சுத்தனாகிறான்' என்று ஸ்ம்ருதியிருப்பதால். பிதா தேசாந்தரத்தில் இறந்து, புத்ரன் வேறு தேசத்திலிருந்தால், ப்ரேதக்ரியைகள் செய்தான பிறகு புத்ரன் பிதாவின் மரணத்தைக் கேட்டால், பத்து நாட்களா சௌசம்' என்ற வசநத்தால் விதிக்கப்பட்ட மூன்று நாட்களா சௌசம்' என்ற வசநத்தால் விதிக்கப்பட்ட மூன்று நாட்களா சௌசம் கநிஷ்ட புத்ர விஷயம். ஜ்யேஷ்டனுக்கோவெனில் — 'பிதாவுக்கு க்ரியை

செய்யப்பட்டிருந்தாலும் பத்து நாட்கள் ஆசௌசமுண்டு. திலோதக பிண்டங்களையும் ஸபிண்டீகரணத்தையும் மறுபடியும் செய்ய வேண்டும்' என்று பத்து நாட்களாசௌசம் விதிக்கப்பட்டிருப்பதாலும், செய்யப்பட்ட ஸபிண்டீகரணத்தையும் மறுபடி செய்யும்படி விதித்திருப்பதாலும், இதற்கு ஜ்யேஷ்ட விஷயத்வம் அறியப்படுகிறது.

## सपत्नीमातृविषये ।

मातृव्यतिरिक्तपितृपत्नीविषये विशेषमाह दक्षः - पितृपत्न्यामतीतायां मातृवर्जं द्विजोत्तमः । संवत्सरे व्यतीतेऽपि त्रिरात्रमशुचिर्भवेत् इति । वरदराजीयेऽपि - प्रागब्दाज्जननीसमं दिशतु तत्प्रेतोदकादिक्रियां तस्माच्चोपरि गौणमातृमरणं श्रुत्वा सदाऽघं त्र्यहम् इति ।। गौणमाता - सपत्नीमाता ।

### ஸபத்நீ மாத்ரு விஷயத்தில்

மாதாவைத் தவிர்த்த பிதாவின் பத்நீ விஷயத்தில் விசேஷத்தைச் சொல்லுகிறார். தக்ஷர் - மாதாவைத் தவிர்த்த, பித்ரு பத்நியின் மரணத்தில் ஒரு வர்ஷத்திற்குப் பிறகும், ப்ராஹ்மணன் மூன்று நாட்களாசௌசியாவான். வரதராஜீயத்திலும் :- ஒரு வர்ஷத்திற்குள் ஸபத்நீ மாதாவின் ம்ருதியைக் கேட்டால் மாதாவுக்கு ஸமமாக உதகதாநம் முதலிய ப்ரேத க்ரியையைச் செய்யவும். ஒரு வர்ஷத்திற்கு மேல் கேட்டால் எப்பொழுதும் மூன்று நாட்களாசௌசம்.

## भ्रातृविषये ।

स्मृत्यन्तरे—भ्रातुर्देशान्तरमृतौ षण्मासाद्वत्सरादधः । दशरात्रं त्रिरात्रं स्याद्दशाहं दाहकस्य तु इति ।। दाहकस्य भ्रातुः । तथा देशान्तरमृतिर्यत्र त्वनुजाग्रजयोर्यदि । षण्मासाद्वत्सरादर्वाग्दशाहं त्र्यहमाचरेत् इति ।। एतदकृतक्रियभ्रातृविषयम् ।। यदाह पैठीनसिः

- प्रोषितभ्रातृमरणे दत्तपिण्डोदकक्रिये । त्रिरात्रं सूतकं तत्र दशाहं पुत्रभार्ययोः इति । एतच्च त्रिरात्रविधानं षण्मासात् पूर्वं वेदितव्यम् । तथा च गालवः - कृतोदके तु षण्मासात् पक्षिणीत्वघमिष्यते । अधश्चेत्त्रिदिनं ग्राह्यमकृते तु दशाहिकम् इति । षण्मासादूर्ध्वं भ्रातुरघं पक्षिणीत्यर्थः ।

### ப்ராத்ரு விஷயத்தில்

*ப்ராதாவின் விஷயத்தில் ஒரு ஸ்ம்ருதி - ப்ராதா தேசாந்தரத்தில் மரித்து 6-மாதத்திற்குள் கேட்டால் பத்து நாட்களாசௌசம். பிறகு வர்ஷத்திற்குள் கேட்டால் மூன்று நாட்களாசௌசம். தஹனம் செய்த ப்ராதாவுக்குப் பத்து நாட்களாசௌசம். அவ்விதமே - 'தம்பிக்கு, அல்லது தமயனுக்குத் தேசாந்தரத்தில் மரணம் நேர்ந்து ஆறு மாதத்திற்குள் கேட்டால் பத்து நாட்கள், பிறகு வர்ஷத்திற்குள் கேட்டால் மூன்று நாட்களாசௌசம், என்றுமுள்ளது. இது க்ரியை செய்யப்படாத ப்ராதாவைப் பற்றியது. ஏனெனில், பைடீநஸி :- 'தேசாந்தரத்திலுள்ள ப்ராதாவின் மரணத்தில் ப்ரேத க்ரியைகள் செய்யப்பட்டிருந்தால் 3 நாடகள் ஆசௌசம். புத்ரனுக்கும் பார்யைக்கும் பத்து நாட்களாசௌசம்' என்றார். இவ்விதமான த்ரிராத்ர விதி ஆறு மாதத்திற்கு முன் என்று அறியவும். அவ்விதமே, காலவர் :- க்ரியைகள் செய்யப்பட்டவன் விஷயத்தில் ஆறு மாதத்திற்குப் பிறகு பக்ஷிணியாசௌசம். 6-மாதத்திற்கு முன் மூன்று நாளாசௌசம். க்ரியை செய்யப்படாவிடில் பத்து நாட்களாசௌசம்.*

सङ्ग्रहे :– दशरात्रं सदा पित्रोः परोक्षमरणश्रुतौ । त्र्यहं मातृसपत्न्यास्तु दशाहं वत्सरादधः । कृतौर्ध्वदैहिकेऽत्यब्दे दिनं तस्यास्त्र्यहं तयोः इति । वत्सरमध्ये तत्परं वा मातापितृमरणश्रवणे सर्वेषामपि पुत्राणां दशाहमेव । सपत्नीमातुरसमक्षमृतिश्रवणे वर्षात्

परं त्र्यहमेव । तत्पूर्वं तु दशाहम् । अत्र विशेषः - ज्येष्ठेन कृते और्ध्वदैहिके अब्दे चातिक्रान्ते तस्याः सपत्नीमातुः परोक्षमृतिश्रवणे दिनम् । तयोर्मातापित्रोस्तच्छ्रुतौ कनिष्ठस्य त्र्यहमित्यर्थः ।

*ஸங்க்ரஹத்தில் :- தேசாந்தரத்தில் ஸம்பவித்த மாதா பித்ரு மரணத்தை, ஒரு வர்ஷத்திற்குள், அல்லது பிறகு கேட்டாலும், எல்லாப் புத்ரர்களுக்கும் பத்து நாட்களாசௌசமே. ஸபத்நீ மாதாவின் பரோக்ஷ மரண ச்ரவணத்தில் வர்ஷத்திற்குப் பிறகு மூன்று நாட்களாசௌசமே. வர்ஷத்திற்கு முன் பத்து நாட்களாசௌசம். இதில் விசேஷம் — 'ஜ்யேஷ்டன் ப்ரேதக்ரியை செய்த பிறகு வர்ஷமும் அதிக்ராந்தமான பிறகு ஸபத்நீ மாதாவின் பரோக்ஷ மரண ச்ரவணத்தில் ஒரு நாளாசௌசம். மாதா பிதாக்களுக்கு ஜ்யேஷ்டனால் க்ரியைகள் செய்யப்பட்டு ஒரு வர்ஷத்திற்குப் பிறகு கேட்டால் கநிஷ்ட புத்ரனுக்கு மூன்று நாட்களாசௌசமென்று என்பது பொருள்.*

## पुनः संस्कारे विशेषः

पुनः संस्कारे विशेषः स्मृत्यर्थसारे दर्शितः - आहिताग्नौ विदेशस्थे मृते यावद्विधिना संस्कारस्तावत्तत्पुत्रादीनां मुख्यकर्तॄणां सन्ध्यादिकर्मलोपो नास्ति । शुभकर्म न कर्तव्यम् । अनाहिताग्नेर्विधिवद् दहनाभावे तदानीमाशौचग्रहणं कृताकृतम् । दशाहानन्तरं मरणश्रवणे दाहात् पूर्वं त्र्यहाद्याशौचं नास्ति । मुख्यकर्तृसम्भवे तदितरज्ञातीनां शुभकर्म च कर्तव्यम् । आहिताग्नेर्विधिवद् दहनाभावे आशौचग्रहणं नास्त्येव । पुनः संस्कारे दाहाद्याशौचमपि संपूर्णम् । अनाहिताग्नेः पुनः संस्कारः सूतकमध्ये चेच्छेषदिनाच्छुद्धिः अतीते सूतके पुनः संस्कारश्चेत् पूर्वमगृहीताशौचस्य पुत्रस्य पत्न्याश्च दशाहमाशौचम् । गृहीताशौचयोः पुत्रपत्न्यो स्त्रिरात्रम् । पत्न्याः पुनः संस्कारे

पत्युश्चैवम्। सपत्न्योर्मिथश्चैवम् । गृहीताशौचानां कृतोदकानां पुनराशौचं नास्ति। अकृतोदकानां पुनरेकाहम् इति।

### புனஸ் ஸம்ஸ்காரத்தில் விசேஷம்

*புனஸ் ஸம்ஸ்காரத்தில் விசேஷம் சொல்லப் பட்டுள்ளது. ஸ்ம்ருத்யர்த்த ஸாரத்தில் - ஆஹிதாக்னி தேசாந்தரத்தில் இறந்தால், அவனுக்கு விதிப்படி ஸம்ஸ்காரம் ஆரம்பிக்கப்படும் வரையில், புத்ராதிகளான முக்ய கர்த்தாக்களுக்கு ஸந்த்யாவந்தநாதி கர்மங்களுக்கு லோபமில்லை. சுப கர்மங்களைச் செய்யக் கூடாது. அநாஹிதாக்னிக்கு விதிப்படி தஹநம் செய்யப்படாவிடில் ஆசௌசாநுஷ்டாநத்தைச் செய்தாலும் செய்யலாம். செய்யாமலுமிருக்கலாம். பத்து நாட்களுக்குப் பிறகு மரணம் ச்ருதமானுல் தஹநத்திற்கு முன் அதிக்ராந்த த்ரிராத்ராத்யா சௌசமில்லை. முக்ய கர்தா இருந்தால், அவனைத் தவிர்த்து ஜ்ஞாதிகள் சுபகர்மங்களையும் செய்யலாம். ஆஹிதாக்னிக்கு யதாவிதி தஹநம் செய்யப்படாவிடில் ஆசௌசாநுஷ்டாநம் கிடையாது, நிச்சயம். புனஸ் ஸம்ஸ்காரத்தில் தாஹம் முதல் ஸம்பூர்ணா சௌசம். அநாஹிதாக்னிக்கோவெனில் ஸம்ஸ்காரம் ஆசௌச மத்யத்தில் செய்யப்பட்டால் மீதியுள்ள தினங்களால் சுத்தி. ஆசௌசம் சென்ற பிறகு புனஸ் ஸம்ஸ்காரம் செய்யப்பட்டால் முன் ஆசௌசத்தை அனுஷ்டிக்காத புத்ரனுக்கும் பார்யைக்கும் பத்து நாட்களா சௌசம். ஆசௌசமநுஷ்டித்தவரான அவர்களுக்கு மூன்று நாட்கள் ஆசௌசம். பத்நியின் புனஸ் ஸம்ஸ்காரத்தில் பதிக்குமிவ்விதம். சக்களத்திகளுக்கும் பரஸ்பர மிவ்விதம். ஆசௌசமநுஷ்டித்து உதகதாநமும் செய்துள்ள ஜ்ஞாதிகளுக்கு மறுபடி ஆசௌசமில்லை. உதகதானம் மட்டில் செய்யாதவர்களுக்கு ஒரு நாளா சௌசம்.*

बृहस्पतिः - आशौचे वर्तमाने तु पुनर्दाहक्रिया यदि । तच्छेषेणैव शुद्धिः स्यादतीते सूतकं भवेत् । दशाहादि यथावर्णं

पित्रोराशौचमाचरेत्। पत्नीनामपि विज्ञेयं दम्पत्योश्च परस्परम्। सपिण्डानां त्रिरात्रं स्यादित्युवाच प्रजापतिः इति। स्मृत्यन्तरेऽपि –आशौचान्तः कीकसादेः प्रदाहे शेषाच्छुद्धिस्तद्बहिश्चेत्त्रिरात्रम्। पुत्रस्यापि प्रागघस्य ग्रहश्चेन्नोचेत्तस्याप्यत्र सम्पूर्णमाहुः इति। कीकसं - अस्थि। पारस्करः - आशौचे वर्तमाने तु तच्छेषेण विशुध्यति। गते त्वाशौचसमये पुनर्दाहो यदा भवेत्। मरणादि गृहीतस्य त्रिरात्राच्छुद्धिरिष्यते। अगृहीतस्य पुत्रस्य सम्पूर्णाशौचमेव हि इति।

ப்ருஹஸ்பதி :- ஆசௌசமிருக்கும்பொழுது புனர்தஹநம் செய்யப்பட்டால் மீதியுள்ள தினங்களாலேயே சுத்தி. பத்து நாட்களுக்குப் பிறகானால் தசாஹம் முதலிய ஆசௌசம் அந்தந்த வர்ணத்திற்கு உரியபடி. மாதாபிதாக்களுக்குப் பத்து நாட்கள் ஆசௌசம் முதலிய ஆசௌசத்தை அநுஷ்டிக்கவும். பத்நிகளுக்கும் பரஸ்பரமிப்படியே. தம்பதிகளுக்கும் பரஸ்பரமிப்படியே. ஸபிண்டர்களுக்கு மூன்று நாட்களா சௌசம். மற்றொரு ஸ்ம்ருதியிலும் :- ஆசௌசமத்தியில் அஸ்தி முதலியதின் தாஹம் செய்யப்பட்டால், மீதியுள்ள நாட்களால் சுத்தி. பத்து நாட்களுக்குப் பிறகானால் மூன்று நாட்களா சௌசம். புத்ரனுக்குமிவ்விதமே, முன் ஆசௌசமனுஷ்டித்திருந்தால். இல்லாவிடில் அவனுக்கு ஸம்பூர்ணா சௌசமென்கிறார்கள். பாரஸ்கரர் :- ஆசௌசம் அனுஷ்டிக்கப்படும்பொழுது, புனர்தாஹமானால் மீதி தினங்களால் சுத்தி. ஆசௌச நாட்களுக்குப் பிறகானால் மரணம் முதல் ஆசௌசமனுஷ்டித்தவனுக்கு மூன்று நாட்களால் சுத்தி. ஆசௌச க்ரஹணமல்லாத புத்ரனுக்குப் பூர்ணா சௌசமே.

अगृहीताशौचविषये देवलः :- दग्ध्वाऽस्थि पित्रोः पुत्रस्तु दशाहमशुचिर्भवेत्। तयोः प्रतिकृतिं दग्ध्वा शाववच्छौचमिष्यते

इति । शाववत् - दशाहमित्यर्थः । स्मृत्यन्तरेऽपि — अस्थ्ना पलाशवृन्तैर्वा दग्ध्वा तु प्रतिरूपकम् । पित्रोर्दशाहमाशौचमन्येषां तु त्रिरात्रकम् इति । तथा संस्कृताग्नौ दहेत्पश्चाद्दशरात्रं तु सूतकम् । इतरेषां त्रिरात्रं स्यात् ज्ञातीनामपि सूतकम् इति ।

*ஆசௌசமனுஷ்டிக்காதவன் விஷயத்தில், தேவலர் :- மாதாபிதாக்களுக்கு அஸ்தி தாஹம் செய்தால் புத்ரன் பத்து நாட்களாசௌசமுடையவனுவான். அவர்களுக்கே ப்ரதிக்ருதி தாஹம் செய்தால் பத்து நாட்களா சௌசமெனப்படுகிறது. மற்றொரு ஸ்ம்ருதியிலும் :- அஸ்தியாலோ, பலாச வ்ருந்தங்களாலோ மாதா - பிதாக்களுக்கு ப்ரதிக்ருதி தாஹம் செய்தால் பத்து நாட்களா சௌசம் மற்றவர்க்கு மூன்று நாட்களா சௌசம். அப்படியே 'ஆசௌச ஸமயத்திற்குப் பிறகு ஸம்ஸ்காரமுள்ள அக்நியில் தஹித்தால் பத்து நாட்களா சௌசம். மற்ற ஜ்ஞாதிகளுக்கு மூன்று நாட்களா சௌசம்' என்றுள்ளது.*

यत्तु स्मृत्यन्तरवचनम् — दग्ध्वाऽस्थि पित्रोः पुत्रस्तु दशाहं सूतकी भवेत् । तयोः प्रतिकृतिं दग्ध्वा त्रिरात्र मशुचिर्भवेत् इति, अत्रास्थिदाहे पुत्रस्य दशाहविधानं अगृहीताशौचविषयम् । प्रतिकृतिदाहे त्रिरात्रविधानं गृहीताशौच विषयम् ।। अन्ये तु — पुत्रस्य गृहीताशौचस्यास्थिदाहे दशाहं प्रतिकृतिदाहे त्रिरात्रम् इति व्याचक्षते । अगृहीताशौचविषये चोदाहरन्ति स्मृत्यन्तरम् — 'नरं पर्णमयं दग्ध्वा त्रिरात्रमशुचिर्भवेत् । मातापित्रोर्दशाहं स्यादस्थिदाहे तथैव च इति । प्रागघग्रहणाभावे पर्णनरदाहे सपिण्डानां त्र्यहम् । मातापित्रोस्तादृग्विधदाहे अस्थिदाहे सपिण्डानां च दशाहमिति च ते व्याकुर्वते ।

*மற்றொரு ஸ்ம்ருதியில் :- மாதா பிதாக்களின் அஸ்தியைத் தஹித்தால் புத்ரன் மூன்று நாட்களா*

சௌசியாவான். ப்ரதி க்ருதி தாஹம் செய்தால் மூன்று நாட்களா சௌசியாவான் என்றுள்ளதே எனில், இங்கு அஸ்தி தாஹத்தில் புத்ரனுக்குத் தசாஹ விதி முன் ஆசௌசமனுஷ்டிக்காத விஷயத்தில். ப்ரதிக்ருதி தஹநத்தில் த்ரிராத்ர விதி ஆசௌசமனுஷ்டித்த விஷயத்தில். மற்றவரோவெனில், ஆசௌசமனுஷ்டித்த புத்ரனுக்கே அஸ்தி தாஹத்தில் தசாஹம். ப்ரதிக்ருதி தாஹத்தில் த்ரிராத்ரம் என்று வ்யாக்யானம் செய்கின்றனர். ஆசௌசமனுஷ்டிக்காதவன் விஷயத்தில் வசனத்தையும் உதாஹரிக்கின்றனர் மற்றொரு ஸ்ம்ருதியை - 'பலாச பர்ணங்களால் ப்ரதிக்ருதிதாஹம் செய்தால் மூன்று நாட்கள் அசுத்தனுவான். மாதா பித்ரு விஷயத்தில் பத்து நாட்களாசௌசம். அஸ்தி தாஹத்திலுமிவ்விதமே' என்று. முன் ஆசௌசம் அனுஷ்டிக்காவிடில் பலாச பர்ண தாஹத்தில் ஸபிண்டர்களுக்கு மூன்று நாட்கள். மாதா பிதாக்களுக்குப் பர்ணதாஹத்திலும், அஸ்தி தாஹத்திலும் ஸபிண்டர்களுக்கும் பத்து நாட்கள் என்று அவர்கள் வ்யாக்யானம் செய்கின்றனர்.

तथा च सङ्ग्रहकारः - यज्वायज्वपुनर्दाहे शिष्टाहं यद्यघाद्बहिः । दशाहं त्र्यहमाशौचं पूर्णं प्राक्चेदघाग्रहः । अस्थिदाहे प्रतिकृतेर्दाहे तु त्र्यहमित्यघम् । सपिण्डानां सुतानां तु दशरात्रमिहेष्यते । दशाहमध्ये आहिताग्न्यनाहिताग्न्योः पुनः संस्कारे कृते सति संस्कारदिनादूर्ध्वं दशरात्रावशिष्टमेवाघं भवति । न पुनर्दाहादि दशाहम् । यदि दशाहाद्बहिर्यज्वायज्वपुनर्दाहः स्यात् तत्र दशाहं त्र्यहमिति क्रमेणाघं स्यात् । प्रागघग्रहणाभावे अस्थिदाहे पूर्णम् । प्रतिकृतिदाहे तु सपिण्डानां त्र्यहमेव । पुत्राणां तु प्रतिकृतिदाहेऽपि प्रागाशौचग्रहणाभावे दशाहमेव । तद्ग्रहणेऽपि पितृविषयेऽस्थिदाहे सदा दशाहमिति सङ्ग्रहकारवचनं तैर्व्याख्यातम् ।

**ஸங்க்ரஹகாரர் :-** *'யஜ்வாயஜ்வ + இஹேஷ்யதே' என்றார். பத்து நாட்களுக்குள் ஆஹிதாக்நிக்கும் அநாஹிதாக்நிக்கும் புனஸ் ஸம்ஸ்காரம் செய்யப்பட்டால் ஸம்ஸ்கார திநத்திற்குமேல் மீதியுள்ள தினங்கள் வரையிலேயே ஆசௌசம். புனர்தாஹ திநம் முதல் பத்து நாட்களா சௌசமில்லை. பத்து நாட்களுக்குப் பிறகு ஆஹிதாக்னி அநாஹிதாக்னி இவர்களுக்குப் புனர்தாஹமானால் அதில் 10-நாட்கள், மூன்று நாட்கள் என்று ஆசௌசம் முறையே வரும். முன் ஆசௌசம் க்ரஹிக்காவிடில் அஸ்தி தாஹத்தில் பூர்ணாசௌசம். ப்ரதிக்ருதி தாஹத்திலோ ஸபிண்டர்களுக்கு மூன்று நாட்களாசௌசமே. புத்ரர்களுக்கோ ப்ரதிக்ருதி தாஹத்திலும் முன் ஆசௌசம் க்ரஹிக்கப்படாவிடில் பத்து நாட்களா சௌசமே. ஆசௌசம் க்ரஹிக்கப் பட்டிருந்தாலும், மாதா பித்ரு விஷயத்தில் அஸ்திதா ஹத்தில் எப்பொழுதும் பத்து நாட்களா சௌசமென்று ஸங்க்ரஹகார வசநத்திற்கு வ்யாக்யாநம் அவர்களால் செய்யப்பட்டுள்ளது.*

अपरे तु — ज्ञातीनामगृहीताशौचानां पर्णदाहवद-स्थिदाहेऽपि त्रिरात्रमेव । गृहीताशौचस्य पुत्रस्य पर्णदाहेऽस्थिदाहेऽपि त्रिरात्रमेव । आशौचान्तः कीकसादेः प्रदाहे इत्यादीनां पूर्वोक्तानां वचनानां पुनर्दाह मात्रविषयत्वेन प्रवृत्तत्वात् । माता पित्रोर्दशाहं स्यादस्थिदाहे तथैव च इत्यस्य मातापितृविषये अगृहीताशौचस्य पुत्रस्य पर्णदाहवदस्थिदाहेऽपि दशाहाशौचप्रतिपादनपरत्वात् तत्र सपिण्डविषयत्वाप्रतीते-रित्याहुः ।

**மற்றவரோவெனில் :-** *ஆசௌசத்தை க்ரஹிக்காத ஜ்ஞாதிகளுக்குப் பர்ணதாஹத்திற்போல் அஸ்தி தாஹத்திலும் மூன்று நாட்களாசௌசமே. ஆசௌச மனுஷ்டித்துள்ள புத்ரனுக்குப் பர்ண தாஹத்திலும் அஸ்தி*

தாஹத்திலும் மூன்று நாட்களாசௌசமே. 'ஆசௌசாந்த: கீகஸாதே: ப்ரதாஹே' என்பது முதலிய முன் சொல்லப்பட்ட வசநங்களெல்லாம் புனர்தாஹ மாத்ர விஷயமாய் ப்ரவ்ருத்தித்திருப்பதால். 'மாதா பித்ரோர் தசாஹம் ஸ்யாதஸ்தி தாஹேததைவ ச' என்ற வசனம், மாதா பித்ரு விஷயத்தில் ஆசௌசமனுஷ்டிக்காத புத்ரனுக்குப் பர்ண தாஹத்திற்போல் அஸ்தி தாஹத்திலும் பத்து நாட்களாசௌச மென்பதை ப்ரதிபாதிப்பதில் தாத்பர்யமுள்ள தாகையால் அதில் ஸபிண்ட விஷயத்வம் தோன்ருததால் என்கின்றனர்.

तथा च सङ्ग्रहे — अन्तर्दशाहदाहे तु शेषतः शुचयोऽखिलाः । बहिर्दशाहदाहे तु दाहादित्रिदिनं मतम् । प्रागाशौचग्रहाभावे ज्ञातीनां त्रिदिनं समम् । प्राग्ग्रहे तु त्र्यहं कर्तुरन्येषां तु न विद्यते । कर्ता च तनयः पूर्वाग्रहे पूर्णं तथोदितम् इति । पुराणेऽपि — अस्थ्यभावे पलाशोत्थैः पर्णैः कार्यं शरीरकम् । तथा पर्णमयं दग्ध्वा त्रिरात्रमशुचिर्भवेत् इति । एतद्गृहीताशौच पुत्रविषयम् । गृहीताशौचज्ञातीनां तु नाशौचम् ।

ஸங்க்ரஹத்தில் :- பத்து நாட்களுள் புனர்தாஹமாளுல் மீதியுள்ள தினங்களால் எல்லோரும் சுத்தராகின்றனர். தசாஹத்திற்குப் பிறகு புனர்தாஹமாளுல் தஹன தினம் முதல் மூன்று நாட்களா சௌசம். முன் ஆசௌச க்ரஹணமில்லாவிடில் ஜ்ஞாதிகளுக்கு மூன்று நாட்களா சௌசம். முன் ஆசௌசம் க்ரஹித்த விஷயத்தில் கர்த்தாவுக்கு மூன்று நாட்கள். மற்றவர்க்கில்லை. கர்த்தாவான புத்ரனுக்குப் பூர்வம் ஆசௌச க்ரஹணமில்லாவிடில் பூர்ளுசௌசம் சொல்லப் பட்டுள்ளது. புராணத்தில் :- 'அஸ்தி இல்லாவிடில் பலாச பர்ணங்களால் சரீர ப்ரதிக்ருதியைச் செய்யவும். பர்ண ப்ரதிக்ருதியைத் தஹித்தால் மூன்று நாட்களா சௌசமுடையவளுவான். இது ஆசௌசமனுஷ்டித்த

*புத்ரன் விஷயம். ஆசௌமனுஷ்டித்த ஜ்ஞாதிகளுக்கு ஆசௌசமில்லை.*

तथा च स्मृत्यन्तरे — पुत्रः पित्रोस्तु संस्कारं प्रमादान्न करोति चेत्। ज्ञातीनां दशरात्रं स्यात् तदूर्ध्वं सूतकं न हि। नित्यकर्माणि कुर्वीत स्मृत्युक्तानि तथैव च इति। अन्यत्रापि — वंशजानामसंस्कारे सूतकं तु कथं भवेत्। दशाहात् परतः शुद्धिर्ज्ञातीनां च विशेषतः इति। एतेन दहनमन्तरेणाप्याशौच मुदकदानं चानुष्ठेयमित्युक्तं भवति।

*அவ்விதமே மற்ெருரு ஸ்ம்ருதியில் :- புத்ரன் மாதா பிதாக்களுக்கு ஸம்ஸ்காரத்தைக் கவனமின்மையால் செய்யாவிடில், ஜ்ஞாதிகளுக்குப் பத்து நாட்ளா சௌசம். பிறகு ஆசௌசமில்லை. நித்ய கர்மங்களையும் ஸ்மார்த கர்மங்களையும் செய்யலாம். மற்ெருரு ஸ்ம்ருதியிலும் :- 'ஸபிண்டர்களுக்கு ஸம்ஸ்காரம் நடக்காவிடில் ஆசௌசமெப்படி? ஜ்ஞாதிகளுக்குப் பத்து நாட்களுக்குப் பிறகு சுத்தி'. இதனல் தஹநம் செய்யப்படாவிடினும், ஆசௌசத்தையும் உதக தானத்தையும் அநுஷ்டிக்கலா மென்ருகிறது.*

पुत्रस्यापि पुनर्दहनात्पूर्वमाशौचानुष्ठानमाह वसिष्ठः — प्रमीतपितृकः पित्रोरौर्ध्वदैहिकमाचरेत्। यदि कर्तुमशक्तः स्यादाशौचनियमान्वितः। आदशाहादथोर्ध्वं तु यदा कार्यक्षमस्तदा। त्रिरात्रं समतिक्रम्य श्राद्धं कुर्याद्यथाविधि। दाहकस्यैतदाशौचमितरेषां न विद्यते इति। इतरेषां - दत्तोदकसपिण्डानामित्यर्थः।

*புத்ரனுக்கும் புனர் தஹநத்திற்குமுன் ஆசௌசாநுஷ்டானத்தைச் சொல்லுகிருர் வஸிஷ்டர் :- புத்ரன், இறந்த மாதா பிதாக்களுக்கு, ப்ரேத க்ரியையைச் செய்ய வேண்டும். செய்வதற்கு சக்தியற்றவனுனல் பத்து*

நாட்கள் வரையில் நியமத்துடன் ஆசௌசம் அநுஷ்டிக்கவும். அதற்குமேல் எப்பொழுது கார்யங்களைச் செய்யச் சக்தியுள்ளவனாகிறானோ, அப்போது மூன்று நாட்கள் கழித்து விதிப்படி ச்ராத்தம் (ஸபிண்டீகரணம்) செய்ய வேண்டும். இந்த ஆசௌசம் தாஹகனுக்கு, மற்றவர்க்கு ஆசௌசமில்லை. மற்றவர்க்கு - உதக தாநம் செய்த ஸபிண்டர்களுக்கு என்று பொருள்.

गृहीताशौचानामदत्तोदकानान्तु सपिण्डानामुदक निमित्ता-शौचमुक्तं स्मृत्यन्तरे — पूर्वं गृहीताशौचानां न पुनर्दहने त्वघम्। तस्मिन्नुदकदातॄणामाशौचं मनुरब्रवीत् इति । मरणादिगृहीतस्य त्रिरात्राच्छुद्धिरिष्यते इति पुत्रस्य त्रिरात्राशौच विधानात् ज्ञातीनामेकरात्रं न्यायसिद्धमिति व्याख्यातारः । आहिताग्ने-र्मन्त्रवद्दहनाभावे पुत्रादीनामाशौचं नास्ति, किं तु पुनर्दाहसमय एवाशौचमित्युक्तं चन्द्रिकायाम्— आहिताग्नेस्तु विधिवद्दाहान्तं नास्ति चेत्तदा । आशौचग्रहणं नास्ति दाहाद्याशौचमिष्यते इति । दाहाद्याशौचं - पुनर्दाहाद्याशौचम्। तच्च दशाहम्।

ஆசௌசமனுஷ்டித்து உதக தானம் செய்யாதவருக்கோவெனில் உதகதாந நிமித்த ஆசௌசம் சொல்லப்பட்டுள்ளது மற்றொரு ஸ்ம்ருதியில் :- முன் ஆசௌசமனுஷ்டித்தவர்களுக்குப் புனர் தஹநத்திலா சௌசமில்லை. புனர் தஹந காலத்தில் உதக தாநம் செய்பவர்களுக்கு ஆசௌசமுண்டென்றார் மனு. 'மரணாதி + இஷ்யதே' என்று புத்ரனுக்கு த்ரிராத்ரா சௌச விதியிருப்பதால் ஜ்ஞாதிகளுக்கு ஒரு நாளா சௌசம் ந்யாய ஸித்தமென்று வ்யாக்யானக்காரர்கள் சொல்லுகிறார்கள். ஆஹிதாக்நிக்கு மந்த்ரத்துடன் தஹநமில்லாவிடில், புத்ரன் முதலியவர்க்கு ஆசௌசமில்லை. ஆனால், புனர்தஹந ஸமயத்திலேயே ஆசௌசம் என்று சொல்லப்பட்டுள்ளது. சந்த்ரிகையில் :- 'ஆஹிதாக்னிக்கு விதிப்படி தஹநமில்லாவிடில் ஆசௌசாநுஷ்டானமில்லை. தஹநம்

முதல் ஆசௌசம் விதிக்கப்படுகிறது' என்று. தஹநம் முதல் - புனர்தஹநம் முதல். அது 10-நாட்கள்.

तथा पारस्करः — आहिताग्नेस्तु दहनात् दशाहाशौचमिष्यते इति। आहिताग्निरपि विदेशस्थो गृही यावत् विधिना नैव संस्कृतः। पुत्रादीनां तु सन्ध्यादि कर्मलोपो न विद्यते इति। पैठीनसिरपि — आहिताग्निश्चेत् प्रवसन् म्रियेत पुनः संस्कारं कृत्वा शाववच्छौचमिष्यते इति। स्मृत्यन्तरेऽपि — दशाहान्तं सपिण्डानां मृतौ प्रेतक्रिया भवेत्। पुनः संस्कारे त्रिरात्रं स्याद्यष्टुः पित्रोर्दशाहतः इति। अनाहिताग्नेः पुनः संस्कारे सपिण्डानां त्रिरात्रम्। यष्टुः - आहिताग्नेः पुनः संस्कारे सपिण्डानां दशाहम्। पित्रोश्च पुनः संस्कारे पुत्राणां दशाहमित्यर्थः।

**பாரஸ்கரர்** :- 'ஆஹிதாக்னியின் தஹநம் முதல் 10-நாட்கள் ஆசௌசம் விதிக்கப்படுகிறது. விசேதத்திலுள்ள ஆஹிதாக்னிக்கு விதிப்படி ஸம்ஸ்காரம் செய்யப்படாதவரையில், புத்ராதிகளுக்கு ஸந்த்யா முதலிய கர்மங்களுக்கு லோபமில்லை' என்றார். **பைடீநஸியும்** :- ப்ரவாஸத்திலுள்ள ஆஹிதாக்னி மரித்தால், புனஸ் ஸம்ஸ்காரத்தைச் செய்து, சாவாசௌசத்தை முழுவதும் அனுஷ்டிக்கவும். **ஸ்ம்ருத்யந்தரத்திலும்** :- ஸபிண்டர்களுக்கு 10 நாட்கள் ஆசௌசம் ப்ரேத க்ரியை நடந்தால். புநஸ் ஸம்ஸ்கார விஷயத்தில் 3-நாட்களாசௌசம். ஆஹிதாக்னிக்குப் புநஸ் ஸம்ஸ்காரமானால் ஜ்ஞாதிகளுக்கு 10-நாட்களாசௌசம். மாதா பிதாக்களுக்குப் புநஸ் ஸம்ஸ்காரமானால் 10-நாட்களாசௌசம் என்று பொருள்.

अनेकसपिण्डपुनर्दाहे सङ्ग्रहकारः — मृतानां तु सपिण्डानां काले बहुतिथे गते। तान् सर्वान् सह संस्कुर्यात्त्रिरात्रेण यथाविधि। एकोद्दिष्टं चतुर्थेऽह्नि तेषां पिण्डं पृथक्पृथक्। सपिण्डीकरणं तेषां

सहैव पृथगेव वा इति । अब्दात्परं दुर्मृतसपिण्डादिपुनर्दाहविषये गर्गः — अतीतेऽब्दे तु संस्कारे एकाहात् पिण्डमर्पयेत् । श्राद्धं दद्यात् द्वितीयेऽह्नि तृतीयेऽह्नि सपिण्डनम् इति । मातापितृविषये तु त्रिरात्रम्, अब्दान्ते वाऽथ षण्मासे पुनः कृत्वा तु संस्कृतिम् । त्रिरात्रमशुचिर्भूत्वा श्राद्धं कुर्यात् चतुर्दिने इति स्मरणात् ।

*அநேக ஸபிண்டர்களுக்குப் புநர்தாஹம் செய்தால்* **ஸங்க்ரஹகாரர்** *:- ஸபிண்டர்கள் இறந்த வெகு காலத்திற்குப் பிறகு தஹநம் செய்வதானால், இறந்த அவர்கள் எல்லோரையும் சேர்த்தே ஸம்ஸ்காரம் செய்யவும். மூன்று நாட்களில் விதிப்படி செய்யவும். 4-வது நாளில் ஏகோத்திஷ்டத்தைச் செய்யவும். பிண்டதாநத்தைத் தனியே செய்யவும். அவர்களுக்கு ஸபிண்டீகரணத்தைச் சேர்த்தே செய்யலாம். தனியாயும் செய்யலாம். ஒரு வர்ஷத்திற்குப் பிறகு துர்ம்ருதஞான ஜ்ஞாதி முதலியவர்களுக்குப் புநர்தஹநம் செய்யும் விஷயத்தில்,* **கர்கர்** *:- ஒரு வர்ஷத்திற்குப் பிறகு ஸம்ஸ்காரம் செய்தால் முதல் நாளில் பிண்ட தானத்தையும், இரண்டாவது நாளில் ஏகோத்திஷ்டத்தையும், மூன்ருவது நாளில், ஸபிண்டீகரணத்தையும் செய்யவும்''. மாதா பித்ரு விஷயத்திலானால் 3 நாட்கள் - ''வர்ஷத்திற்குப் பிறகாவது, 6-மாதங்களுக்குப் பிறகாவது புநஸ் ஸம்ஸ்காரம் செய்தால், 3-நாட்கள் ஆசௌசமனுஷ்டித்து, 4-ஆவது நாளில் ச்ராத்தத்தைச் செய்ய வேண்டும்'' என்று ஸ்ம்ருதியிருப்பதால்.*

अयमत्र निष्कर्षः - आहिताग्नेः पुनर्दाहाद्येव पुत्रादीनामाशौचम्, न ततः पूर्वम् । अनाहिताग्नेः तु पुनर्दाहात् पूर्वमाशौचग्रहणं विकल्पितम् । आहिताग्न्यनाहिताग्न्योर्दशाहमध्ये पुनर्दाहे शिष्टाहमेवाघम् । दशाहात् परमाहिताग्नेः पुनर्दाहे पुत्रस्य सपिण्डानां च दशाहम् । अनाहिताग्नेः पुनरस्थिदाहे प्रतिकृतिदाहे च

पूर्वमगृहीताशौचस्य पुत्रस्य दशाहम्। गृहीताशौचस्य तु त्रिरात्रम्। अस्थिदाहे प्रतिकृतिदाहे चागृहीताशौचानां ज्ञातीनां त्रिरात्रम्। गृहीताशौचानामदत्तोदकानामुदकदाननिमित्तमेकरात्रम्। दत्तोदकानां तु न किञ्चित्। अन्ये तु — अस्थिदाहे पुत्राणां गृहीताशौचानामपि दशाहम्। प्रतिकृतिदाहे त्रिरात्रम्। सपिण्डानामप्यगृहीताशौचानामस्थिदाहे दशाहम्। गृहीताशौचानां तु त्रिरात्रम् इत्याहुः। अनेकसपिण्डपुनर्दाहे त्रिरात्रम्। अब्दानन्तरमेकस्य वा अनेकस्य वा पुनर्दाहे एकरात्रम्। मातापितृविषये तु त्रिरात्रमिति।

இங்கு நிர்ணயமிது - 'ஆஹிதாக்நியின் புநர்தஹநம் முதற் கொண்டே புத்ரன் முதலியவர்களுக்கு ஆசௌசம். அதற்குமுன் ஆசௌசமில்லை. அநாஹிதாக்னிக்கானுல் புநர் தஹநத்திற்கு முன் ஆசௌச க்ரஹணம் விகல்பிதம். ஆஹிதாக்னி, அநாஹிதாக்னி இருவர்களுக்கும் தசாஹமத்தியில் புநர்தஹனமானுல் மீதியுள்ள நாட்களே ஆசௌசம். தசாஹத்திற்குப் பிறகு ஆஹிதாக்னிக்குப் புனர் தாஹமானுல், புத்ரனுக்கும் ஸபிண்டர்களுக்கும் பத்து நாட்களாசௌசம். அநாஹிதாக்னிக்கு அஸ்தி தாஹமானுலும், ப்ரதிக்ருதி தாஹமானுலும் முன் ஆசௌசம் அனுஷ்டிக்காத புத்ரனுக்குப் பத்து நாட்களா சௌசம். ஆசௌசம் அநுஷ்டித்தவனுக்கு த்ரிராத்ரம். அஸ்தி தாஹமானுலும், ப்ரதிக்ருதி தாஹமானுலும் ஆசௌசமனுஷ்டிக்காத ஜ்ஞாதிகளுக்கு மூன்று நாட்களா சௌசம். ஆசௌசமனுஷ்டித்து, உதக தாநம் செய்யாத ஜ்ஞாதிகளுக்கு உதகதாந நிமித்தமாய் ஒருநாள் ஆசௌசம். உதகதாநம் செய்தவர்களுக்கு ஒன்றுமில்லை. சிலரோவெனில் :- 'அஸ்தி தாஹத்தில் முன் ஆசௌசம் அநுஷ்டித்த புத்ரர்களுக்கு தசாஹம். ப்ரதிக்ருதி தாஹத்தில் மூன்று நாட்களாசௌசம். ஆசௌசமனுஷ்டிக்காத ஜ்ஞாதிகளுக்கும் அஸ்தி தாஹத்தில் தசாஹம்.

ஆசௌசமனுஷ்டித்தவர்களுக்கு மூன்று நாட்களாசௌசம் என்கின்றனர். அநேக ஸபிண்டர்களின் புனர்தாஹத்திலும் த்ரிராத்ரம். ஒரு வர்ஷத்திற்குப் பிறகு ஒருவனுக்கோ, அநேகருக்கோ புனர்தாஹம் செய்தால் ஒரு நாளாசௌசம். மாதா பித்ரு விஷயத்திலானுல் மூன்று நாட்கள் என்கின்றனர்.

सपिण्डसमानोदकादीनामुक्तमिदं दशरात्रत्रिरात्राद्याशौचं आहिताग्नेस्तत्पत्न्याश्चोपरमे संस्कारदिवसप्रभृति कर्तव्यम् । अनाहिताग्नेर्मरणदिवसप्रभृति । उभयोरपि संचयनं दाहादि द्वितीयादिदिवसे कार्यम् । यथाहाङ्गिराः — अनग्निमत उत्क्रान्तेः साग्नेः संस्कारकर्मणः । शुद्धिः सञ्चयनं दाहान्मृताहस्तु यथातिथि इति । अत्र विज्ञानेश्वरः — साग्नेः संस्कारकर्मणः इति श्रवणादाहिताग्नौ पितरि देशान्तरमृते तत्पुत्राणामा-संस्कारात्सन्ध्यादि कर्मलोपो नास्तीत्यनुसन्धेयम् । यदाह पैठीनसिः — अनग्निमतः उत्क्रान्तेराशौचं हि द्विजातिषु । दाहादग्निमतो विद्याद्विदेशस्थे मृते सति इति । स एव — आहिताग्निश्चेत् प्रवसन् म्रियेत पुनः संस्कारं कृत्वा शाववच्छौचम् इति ।

ஸபிண்டர்களுக்கும் ஸமாநோதகர் முதலியவர்களுக்கும் சொல்லிய இந்தத் தசராத்ரம், த்ரிராத்ரம் முதலிய ஆசௌசம், ஆஹிதாக்நி, அவனது பத்நீ இவர்களின் ம்ருதியில் ஸம்ஸ்காரதினம் முதற்கொண்டே அநுஷ்டிக்கப்பட வேண்டும். அநாஹிதாக்நியின் ம்ருதியில் மரண தினம் முதற்கொண்டே அநுஷ்டிக்கப்பட வேண்டும். இருவருக்கும் ஸஞ்சயநத்தைத் தஹந தினம் முதல் இரண்டாவது நாளில் செய்ய வேண்டும். அவ்விதம் சொல்லுகிருர் அங்கிரஸ் :- அநாஹிதாக்னி ம்ருதியில் மரண தினம் முதற்கொண்டு ஆசௌசமும், சுத்தியும். ஆஹிதாக்னி ம்ருதியில் ஸம்ஸ்கார தினம் முதல்

ஆசௌசமும் சுத்தியும். இருவர்களுக்கும் ஸஞ்சயனம் தாஹ தினத்திலிருந்து மறுநாளில். ச்ராத்த தினம் இறந்த திதியே. இதில், விக்ஞாநேச்வரர் :- 'ஸாக்னேஸ் ஸம்ஸ்காரகர்மண:' என்று இருப்பதால், ஆஹிதாக்னியான பிதா தேசாந்தரத்தில் மரித்தால், அவனது புத்ரர்களுக்கு ஸம்ஸ்காரம் வரையில் ஸந்த்யாதி கர்மங்களுக்கு லோபமில்லை என்று அறியவும். அவ்விதமே சொல்லுகிறார் பைடீநஸி :- 'தேசாந்தரத்தில் மரித்தால், அநாஹிதாக்னி விஷயத்தில் மரணம் முதல் ப்ராஹ்மணர்களுக்கு ஆசௌசம். ஆஹிதாக்னி விஷயத்தில் ஸம்ஸ்காரம் முதல் ஆசௌசம் என்று. விக்ஞாநேச்வரரே :- 'ஆஹிதாக்னி தேசாந்தரத்தில் மரித்தால், புனஸ் ஸம்ஸ்காரத்தைச் செய்து, பிறகு ஆசௌசமனுஷ்டிக்கவும்' என்றார்.

सन्निहितदेशमरणे तु दाहादिदशाहसत्वेऽपि मरणाद्यप्याशौचमस्ति । सूतकं तु प्रवक्ष्यामि मृतिजन्मनिमित्तकम् इति दक्षस्मरणात् । स्मृत्यन्तरे — अनग्नेर्मरणात्साग्नेराशौचं दाहतः परम् । तयोः सञ्चयनं दाहान्मृताहस्तु तिथिः स्मृता इति । अनाहिताग्नेर्मरणाद्यपि सञ्चयनमुक्तं ब्रह्मपुराणे - अनाहिताग्नेर्मरणादाहिताग्नेस्तु दाहतः । अस्थि संञ्चयनं कुर्यात् स्वशाखोक्तविधानतः इति । अत्राचारतो व्यवस्था । तत्रैव — दाहाद्याशौचं विज्ञेयं सर्वेषा मग्निहोत्रिणाम् । मरणाद्येव कार्यं स्यात् संयोगो यस्य नाग्निभिः इति ।

ஸமீபதேச மரணத்திலானால், தாஹ தினம் முதல் ஆசௌசம் அனுஷ்டித்தாலும், மரணதினம் முதற் கொண்டும் ஆசௌசமுண்டு. 'ஸூதகம் து ப்ரவக்ஷ்யாமி ம்ருதிஜன்ம நிமித்தகம்' என்று தக்ஷஸ்ம்ருதி உள்ளது. மற்றொரு ஸ்ம்ருதியில் அநாஹிதாக்னியின் ம்ருதியில் மரணம் முதற்கொண்டு ஆசௌசம். ஆஹிதாக்னியின் ம்ருதியில் ஸம்ஸ்காரம் முதற்கொண்டு ஆசௌசம். அவ்விருவருக்கும் தஹநத்திற்கு மறுநாளில் ஸஞ்சயநம்.

ச்ராத்த திதி மரண திதியே. அநாஹிதாக்னிக்கு மரண தினம் முதற் கொண்டு ஸஞ்சயநம் சொல்லப்பட்டுள்ளது. **ப்ரஹ்ம புராணத்தில்** :- அநாஹிதாக்னிக்கு மரணத்திலிருந்தும், ஆஹிதாக்னிக்கு ஸம்ஸ்காரத்திலிருந்தும் கணக்கிட்டுத் தன் சாகையில் சொல்லிய விதிப்படி அஸ்தி ஸஞ்சயநம் செய்யவும். இவ்விஷயத்தில் சிஷ்டாசாரத்தால் வ்யவஸ்தையாம். **ப்ரஹ்ம புராணத்திலேயே** :- அக்னி ஹோத்ரிகளின் தஹநம் முதற்கொண்டும், அநாஹிதாக்னியின் தஹநம் முதற் கொண்டும் ஆசௌசம் அநுஷ்டிக்கப்பட வேண்டும்.

व्याघ्रोऽपि — दहनाद्येव कार्यं स्याद्यस्य वैतानिको विधिः इति । अत्र केचिदाहुः — यस्य वैतानिको विधिः इति स्मरणादाहिताग्नेस्तत्पत्न्याश्च वैतानिकाग्निना संस्कारे सति दाहाद्याशौचम् । तदभावे संयोगो यस्य नाग्निभिः इति वचनान्मरणाद्येवानाहिताग्निमरणवदाशौचम् इति । अन्ये तु — उक्तयोर्वचनयोराहिताग्न्यनाहिताग्न्युपलक्षणत्वेन वैतानाग्नि संस्काराभावेऽपि आहिताग्नेस्तत्पत्न्याश्च मरणे दहनाद्येवाशौचम् इत्याहुः । शिष्टाचारादिह व्यवस्था ।

**வ்யாக்ரரும்** :- எவன் ஆஹிதாக்னியோ அவனது தஹநம் முதற்கொண்டே ஆசௌசமநுஷ்டிக்கப்பட வேண்டும். இங்கு சிலர் இவ்விதம் சொல்லுகின்றனர் - ''யஸ்ய வைதாநிகோ விதி:' என்றிருப்பதால், ஆஹிதாக்னிக்கும் அவனது பத்னிக்கும் வைதாநாக்னியால் ஸம்ஸ்காரம் செய்யப்பட்டால் தஹநம் முதலாசௌசம். இல்லாவிடில் 'ஸம்யோகோ யஸ்ய நாக்னிபி:' என்ற வசநத்தால் மரணம் முதற்கொண்டே அநாஹிதாக்னி மரணத்திற் போலாசௌசம்' என்று. **மற்றவரோவெனில்** :- ''முன் சொல்லிய வசநங்கள் ஆஹிதாக்னி அநாஹிதாக்னிகளைச் சொல்வதாகியதால், வைதாநாக்னி ஸம்ஸ்காரமில்லாவிடினும், ஆஹிதாக்னி, ஆஹிதாக்னி

பத்நீ இவர்களின் மரணத்தில் தஹநம் முதற்கொண்டே ஆசௌசம்'' என்கின்றனர். இங்கு சிஷ்டாசாரத்தைக் கொண்டு வ்யவஸ்தையையறியவும்.

## रात्रौ जन्मर्तुमृतिसम्भवे दिननिर्णयः

रात्रौ जन्मादिसम्भवे अर्धरात्रात् परं जन्मादौ सति परदिनम्, पूर्वं तदुत्पत्तौ पूर्वदिनमित्येकः कल्पः । रात्रिं त्रेधा विभज्याद्यभागद्वये जननादौ जाते पूर्वदिनं ग्राह्यम् । उत्तरभागे परदिनमिति द्वितीयः । प्रागुदयादित्यपरः कल्पः ।

**ராத்ரியில் ஜநநம், ருது, மரணம், இவைகளின் ஸம்பவத்தில் நாள் நிர்ணயம்**

*ராத்ரியில் ஜநநம் முதலியது ஸம்பவித்தால், பாதி ராத்ரிக்குப் பிறகு ஸம்பவித்தால் மறுதினம், முன்பு ஆனால் முதல் தினம் என்பது ஒரு கல்பம். ராத்ரியை மூன்றாய்ப் பிரித்து முந்திய இரண்டு பாகத்திலானால் முதல் தினம், மூன்றாவது பாகத்திலானால் மறுநாள் என்பது மற்றொரு கல்பம்.*

तथा विज्ञानेश्वरीये — अर्धरात्रावधिः कालः सूतकादौ विधीयते । रात्रिं कुर्यात्त्रिभागं तु द्वौ भागौ पूर्व एव तु । उत्तरांशः प्रभातेन युज्यते मृतसूतके । ऋतौ च सूतके शावे तृतीयांशः परान्वितः । आद्यौ द्वावंशकौ युक्तौ पूर्वेणाह्नेति निश्चयः । उदिते तु यदा सूर्ये नारीणां दृश्यते रजः ।। जननं वा विपत्तिर्वा यस्याहस्तस्य शर्वरी । रात्रावेव समुत्पन्ने मृते रजसि सूतके । पूर्वमेव दिनं ग्राह्यं यावन्नाभ्युदितो रविः इति । एतेषां च कल्पानां देशाचारेण व्यवस्थेति । अत एव स्वदेशाचारानुसारिणा तुण्डीरमण्डलीयेन सङ्गृहीतम् — त्रियामायास्तृतीयांशे यदि जन्मर्तुमृत्यवः । प्रभातादि यदि द्व्यंशे पूर्वाह्नाद्यघमिष्यते इति । पादोन चतुर्नाडिकारूपसन्ध्याकाल रहिता रात्रिस्त्रियामा ।

*அவ்விதம், விக்ஞானேச்வரீயத்தில் :- ஸூதகம் முதலியதில் அர்த்த ராத்ரத்தை முடிவாக உள்ள காலம் சொல்லப்பட்டுள்ளது. ராத்ரியை மூன்று பாகமாகச் செய்து, முதல் இரண்டு பாகங்கள் முதல் தினத்தைச் சேர்ந்தது. மூன்ருவது பாகம் மறு தினத்தைச் சேர்ந்தது. மரணு சௌசத்தில். ரஜஸ், ஜநநம், மரணம் இவைகளில் மூன்ருவது ராத்ரி பாகம் மறுநாளைச் சேர்ந்தது. முதலான இரண்டு பாகங்கள் முதல் நாளுடன் சேர்ந்தவை என்பது நிர்ணயம். ஸூர்யோதயத்திற்குப் பின் ரஜஸ், ஜநநம், மரணம் இவைகளின் ஸம்பவத்தில் மறுநாள் முதல் கணக்கு. மரணம், ரஜஸ், இவைகளின் ஸம்பவத்தில் மறுநாள் முதல் கணக்கு. மரணம், ரஜஸ், ஜநநம் இவை ராத்ரியில் ஸம்பவித்தால் முதல் நாள் என்று க்ரஹிக்கவும். இது ஸூர்யோதயத்திற்குள்''. பலவிதமான இந்த ப்ரகாரங்களுக்குத் தேசாசாரத்தை அனுஸரித்து வ்யவஸ்தை என்றறியவும். ஆகையாலேயே, ஸ்வதேசாசாரத்தை அனுஸரித்த துண்டீர (தொண்டை) மண்டலத்திலிருந்தவரால் ஸங்க்ரஹிக்கப்பட்டுள்ளது - 'த்ரியாமையின் - ராத்ரியின் மூன்ருவது பாகத்தில், ஜனனம், ரஜஸ், மரணம், இவைகள் ஸம்பவித்தால், மறுநாள் முதல் கணக்கு, முந்திய 2-பாகத்திலானுல் முதல் நாள் முதலாகக் கணக்கு' என்று. 3-3/4 நாழிகையளவுள்ள 2- ஸந்த்யைகளை நீக்கிய ராத்ரி த்ரியாமா.*

अत्राहुः — तृतीयभागे सम्प्राप्ते मलं स्यान्निशि चेत् स्त्रियाः । प्रभातादि त्रिरात्रेण शुद्धिं तस्या विनिर्दिशेत् । प्रत्यूषे जन्ममरणे स्यातां यदि परं दिनम् इति वृद्धपराशरस्मरणात् रात्रिं कुर्यात् त्रिभागं तु इत्यादीनि वचनानि रजोमात्रविषयतया सङ्कोचनीयानि । जन्ममरणयोस्तु अरुणोदयाद्येव(अपर)दिनं ग्राह्यमिति । केचित्तु — सूतके मृतके चैव यदघं परिकीर्तितम् । ते चेत्सूर्योदयादर्वाग्दिनमेकं तु तद्भवेत् इति वचनात् जन्ममरणयोरुदयाद्येव दिनं ग्राह्यमित्याहुः ।

இவ்விஷயத்தில் சிலர் இவ்விதம் சொல்லுகின்றனர் - ராத்ரியில் மூன்றுவது பாகத்தில் ஸ்த்ரீக்கு ரஜோதர்சநமானால் மறுநாள் முதல் மூன்று தினங்களால் அவளுக்குச் சுத்தியைச் சொல்லவும். விடியற்காலத்தில் ஜன்ம மரணங்கள் ஸம்பவித்தால் மறுதினம் முதல் கணக்கிடவும், என்று வ்ருத்தபராசார ஸ்ம்ருதி இருப்பதால், 'ராத்ரியை 3- பாகமாக்கவும்' என்பது முதலாகிய வசநங்கள், ரஜஸ்ஸை மட்டில் விஷயீகரிப்பதாய் ஸங்கோசப் படுத்தப்பட வேண்டும். ஜன்ம மரணங்களிலானால், அருணோதயம் முதற்கொண்டே மறுநாள் என்று க்ரஹிக்க வேண்டும்'' என்று. மற்றும் சிலரோ - 'ஜநநம், மரணம் இவைகளில் சொல்லப்படும் ஆசௌச விஷயத்தில், ஜநநமரணங்கள் ஸூர்யோதயத்திற்கு முன் ஸம்பவித்தால் ஒரு நாள் என்று ஆகும்' என்ற வசநத்தால் ஜநந மரணங்களில் உதயம் முதற்கொண்டே நாள் கணக்குச் செய்யப்பட வேண்டும், என்கின்றனர்.

सम्पर्काशौचं द्रव्यादीनामतिक्रान्ताशौचाभावश्च ।

संपर्काशौचमुक्तं दशरात्रं स्मृतिरत्ने — संपर्कमशनं पानं दशरात्रं विवर्जयेत् । तत् संपर्काद्विवेदेनः शुद्धस्यापि न संशयः इति । एनः - आशौचम् । सम्पर्कशब्दार्थ उक्तः स्मृत्यन्तरे – प्रेतकर्मोपदेशित्वं तत्कृतिश्चाधिभिः सह । सहवासःसपीत्यादि संपर्कार्थं प्रचक्षते इति । अत्र बृहस्पतिः – यस्तैः सहासपिण्डोऽपि प्रकुर्याच्छयनादिकम् । बान्धवोऽबान्धवो वाऽपि स दशाहेन शुध्यति इति । दशाहोपन्यासो दशाहसंपर्कविषयः । यस्मिन् यस्मिन् दिने संपर्कस्तः तद्दिनमात्रमघं भवति । कदाचित् स्पर्शे स्नानमात्रेण शुद्धिः ।

**ஸம்பர்க்காசௌசமும், திரவ்யம் முதலியவைக்கு அதிக்ராந்தா சௌசமில்லையென்பதும்.**

ஸம்பர்க்கா சௌசம் சொல்லப்பட்டுள்ளது ஸ்ம்ருதிரத்னத்தில் :- ஆசௌசியுடன் ஸம்பர்க்கம், போஜநம், பாநம் இவைகளைச் செய்யக் கூடாது. ஆசௌசி ஸம்பர்க்கத்தால், ஆசௌசமில்லாதவனுக்கும் ஆசௌசமேற்படும். ஸம்பர்க்க சப்தத்திற்கு அர்த்தம் சொல்லப்பட்டுள்ளது ஒரு ஸ்ம்ருதியில் :- ப்ரேத கர்மத்தை உபதேசித்தல், அதைச் செய்தல், ஆசௌசிகளுடன் சேர்ந்திருத்தல், சேர்ந்து பானம் செய்தல் முதலியதை ஸம்பர்க்க சப்தத்திற்கு அர்த்தமென்கிறன்றா். ப்ருஹஸ்பதி - ஸபிண்டனல்லாத எவன் ஆசௌசிகளோடு சயநம் முதலியதைச் சேர்ந்து செய்கிறானோ அவன் பந்துவாகினும் பந்துவல்லாதவனாகினும் பத்து நாட்களால் சுத்தனாகிறான். பத்து நாள் என்றது பத்து நாட்களிலும் ஸம்பர்க்கம் செய்த விஷயம். எந்தெந்த தினத்தில் ஸம்பர்க்கமேற்படுகிறதோ அந்த அந்தத் தினம் மட்டிலா சௌசம் ஏற்படும். எப்பொழுதாவது ஸ்பர்சமேற்பட்டால் ஸ்நாநமாத்திரத்தால் சுத்தி.

स्मृत्यन्तरे — प्रेतकर्मणि वक्तॄणामाशौचं कर्तृवद्भवेत् । अन्यकर्मणि वक्तॄणां स्वाहाकारं विनोच्यते इति । संपर्कनिमित्ताशौचे विशेष उक्तः सङ्ग्रहे — अघिसंपर्कतोऽशौचं भवेत् तद्दिनसंख्यकम् । न तद्द्रव्यक्रियास्त्रीणां सांपर्किकमघं भवेत् इति । अतीताशौचविषयेऽपि क्रियाद्रव्येष्वाशौचाभावोऽति दिष्टस्तत्रैव । तथा नैव क्रियाद्रव्येष्वतीतं त्रिदिनाद्यघम् इति ।

**ஒரு ஸ்ம்ருதியில்** :- ப்ரேத கர்மத்தில் சொல்லுகிறவர்களுக்கு ஆசௌசம் கர்த்தாவுக்குப் போலாகும். பிறனது கர்மத்தில் சொல்பவருக்கு ஸ்வாஹாகாரமல்லாமல் சொல்ல வேண்டும். ஸம்பர்க்க நிமித்தாசௌசத்தில் விசேஷம் சொல்லப்பட்டுள்ளது

ஸங்க்ரஹத்தில் :- ஆசௌசியுடன் ஸம்பர்க்கம் செய்தவனுக்கு ஆசௌசம் அந்தத் தினக் கணக்குள்ளதாய் ஏற்படும். அந்த ஸம்பர்க்காசௌசம், அவனது த்ரவ்யங்கள், க்ரியைகள், ஸ்த்ரீகள் இவர்களுக்கு ஏற்படாது. அதிக்ராந்தாசௌச விஷயத்திலும், க்ரியா த்ரவ்யங்களில் ஆசௌசா பாவம் அதிதேசிக்கப் பட்டுள்ளது ஸங்க்ரஹத்திலேயே. 'அவ்விதமே, அதிக்ராந்தமான த்ரிராத்ரா சௌசம், முதலிய ஆசௌசம், க்ரியைகளிலும் த்ரவ்யங்களிலும் ஏற்படாது' என்று.

अत्राङ्गिराः — अतिक्रान्ते दशाहे तु पश्चाज्जानाति चेद्गृही । त्रिरात्रं सूतकं तस्य न तद्द्रव्यस्य कर्हिचित् इति । अत्र द्रव्यमात्रस्याशौचाभावोक्त्या स्त्रीणां क्रियायाश्चातीताशौच मस्तीत्यवगम्यते । यत्तु क्रियासाधन भूतद्रव्यस्याशौचाभावोक्त्या तत्साध्यक्रियाणामप्याशौचाभावः सिध्यतीति तन्न । कर्तुर-शुचित्वेन कर्मानधिकारात् स्वद्रव्यसाध्यान्यकर्तृकक्रियाया आशौचाभाव प्रतिपादने आशौचिद्रव्यस्याशौचाभावोक्त्यैव गतार्थत्वात् । अन्यदीयक्रियाया आशौचाभाववचनं मुधैव स्यात् । अत एव विज्ञानेश्वरादिभिर्गृहिभवानां भार्यादीनां द्रव्याणां च सम्पर्काशौचाभावः द्रव्यस्य त्रिरात्राद्यतिक्रान्ताशौचा-भावश्चोक्तः ।

அங்கிரஸ் :- தசராத்ரம் அதிக்ராந்தமான பிறகு, க்ரஹஸ்தன் அறிந்தால் அவனுக்கு மூன்று நாட்களா சௌசம். அவனது த்ரவ்யத்திற்கு ஆசௌசமில்லை. இங்கு, த்ரவ்யத்திற்கு மட்டில் ஆசௌசமில்லை என்றதால் ஸ்த்ரீகளுக்கும் க்ரியைக்கும் அதீதா சௌசமுண்டென்பது தோன்றுகிறது. 'க்ரியைக்கு ஸாதனமாகிய த்ரவ்யத்திற்கு ஆசௌசமில்லை என்று சொல்லியதாலேயே த்ரவ்ய ஸாத்ய க்ரியைகளுக்கும் ஆசௌசமில்லையென்பது ஸித்திக்கின்றது எனில் அதில்லை. கர்த்தா அசுத்தனாயிருப்பதால் கர்மத்தில்

அதிகாரமில்லாததால், தனது த்ரவ்யத்தால் ஸாத்யமாகிய அன்ய கர்த்ருக க்ரியைக்கு ஆசௌசமில்லை என்பதை ப்ரதிபாதிப்பதில், ஆசௌசியின் த்ரவ்யத்திற்கு ஆசௌசமில்லை என்று சொல்வதாலேயே க்தார்த்தமாவதால், அன்யன் செய்யும் க்ரியைக்கு ஆசௌசமில்லை என்று சொல்வது வீணாகவே ஆகும். ஆகையாலேயே விக்ஞாநேச்வரர் முதலியவர்களால் க்ருஹத்திலுள்ள பார்யை முதலியவர்க்கும் த்ரவ்யங்களுக்கும் ஸம்பர்க்காசௌசாபாவமும், த்ரவ்யத்திற்கு த்ரிராத்ரம் முதலிய அதிக்ராந்த ஆசௌசா பாவமும் சொல்லப்பட்டுள்ளன.

अङ्गिरसा च — आशौचं यस्य संसर्गादापतेद्गृहमेधिनः । क्रियास्तस्य विलुप्यन्ते गृह्याणां च न तद्भवेत् इति गृहमेधिनः क्रियालोपः तद्गृहे भवानां भार्यादीनां द्रव्याणामप्याशौचाभावश्च कण्ठत एवोक्तः । एवं च संपर्काशौचविषये अतीताशौचविषये च क्रियाया आशौचाभावप्रतिपादकसङ्ग्रहकार वचने प्रमाणं चिन्त्यम् ।

அங்கிரஸ்ஸினும் :- 'எந்த க்ரஹஸ்தனுக்கு ஸம்பர்க்கத்தால் ஆசௌசம் ஏற்படுகிறதோ, அவனது க்ரியைகள் லோபிக்கின்றன. க்ருஹத்திலுள்ளவைகளுக்கு அந்த ஆசௌசமில்லை' என்று க்ருஹஸ்தனுக்கு க்ரியாலோபமும், அவனது க்ருஹத்திலுள்ள பார்யை முதலியவர்களுக்கும், த்ரவ்யங்களுக்கும் ஆசௌசாபாவமும் ஸ்பஷ்டமாகவே சொல்லப்பட்டுள்ளது. இவ்விதம் இருப்பதால், ஸம்பர்க்காசௌச விஷயத்திலும், அதீதாசௌச விஷயத்திலும் க்ரியைக்கு ஆசௌசமில்லை என்று ப்ரதிபாதிக்கும் ஸங்க்ரஹகார வசநத்தில் ப்ரமாணம் தேடப்பட வேண்டும்.

अन्तःशवग्रामाशौचम् ।

अन्तः शवग्रामविषये मनुः — नाद्यादन्तः शवे ग्रामे नाधीयान्न जुहोति च । तानि वीथ्यन्तरे कुर्याद्धनुरेकादशान्तरे इति ॥

वितस्तिर्द्विगुणारत्निस्तस्मात्किष्कुस्ततो धनुः इत्युक्तलक्षणैः एकादशभिर्धनुर्भिर्व्यवहिते वीथ्यन्तरे कुर्यादित्यर्थः ॥ आपस्तम्बः - अन्तः शवमन्तश्चाण्डालम् इति । स्मृत्यन्तरे — ग्रामस्थे शवचण्डाले शूद्राद्यशुचिसन्निधौ । नाध्येतव्यं न भोक्तव्यं न होतव्यं कदाचन इति । अन्यत्रापि — अन्तःशवो यदा ग्रामस्तस्मिन् ग्रामे तदालये । नित्यं नैमित्तिकं काम्यं न कुर्यादिति शासनम् । श्रुतिस्मृत्योर्विरोधे तु श्रुतिरेव बलीयसी । तस्मादन्तःशवे ग्रामे जुहुयाच्छ्रौतपावकम् ।

**அந்தச்சவ க்ராமா சௌசம்**

*அந்தச்சவ க்ராம விஷயத்தில்* **மனு** *:- பிணம் உள்ளுக்குள் இருக்கும் க்ராமத்தில் போஜநம், அத்யயநம், ஹோமம் இவைகளைச் செய்யக் கூடாது. அவைகளை வேறு வீதியில் செய்யலாம். அந்த வீதி பதினொரு விற்கிடை தூரத்திற்கு அப்புறமிருந்தால். விதஸ்தி ( ஒருசாண்) 2- கொண்டது ஒரு அரத்னி, அது 2- கொண்டது ஒரு கிஷ்கு, அது 2-கொண்டது தனுஸ் என்று சொல்லப்பட்ட லக்ஷணமுள்ள பதினொரு தனுஸ் தூரத்திற்கப்பாலுள்ள வேறு வீதியில் செய்யலாம் என்பது பொருள்.* **ஆபஸ்தம்பரும்** *:- சவமாவது, சண்டாளனாவது இருந்தால் க்ராமத்திற்குள் அத்யயநம் கூடாது.* **ஒரு ஸ்ம்ருதியில்** *:- க்ராமத்திற்குள் சவமிருந்தாலும், சண்டாளனிருந்தாலும், சூத்ரன் முதலிய அசுத்தர்கள் எதிரிலும் அத்யயநம், போஜநம், ஹோமம் இவைகளை ஒருகாலும் செய்யக் கூடாது.* **வேறு ஸ்ம்ருதியிலும்** *:- சவமுள்ளிருக்கும் க்ராமத்திலும், க்ரஹத்திலும் நித்ய நைமித்திக காம்ய கர்மங்களைச் செய்யக் கூடாதென்பது சாஸ்த்ர விதி. ச்ருதிக்கும் ஸ்ம்ருதிக்கும் பரஸ்பரம் விரோதம் வந்தால், ச்ருதியே பலிஷ்டையாகும். ஆகையால் அந்தச்சவ க்ராமத்திலும் ச்ரௌதாக்னியில் ஹோமத்தைச் செய்யலாம்.*

स्मृत्यन्तरे विशेषो दर्शितः — चतुःशताधिकैर्विप्रैः सम्पूर्णे ग्राममध्यके। विशेषं सम्प्रवक्ष्यामि जपहोमार्चनं प्रति। अन्तः शवस्य दोषस्तु नास्ति तत्र समाचरेत्। ग्रामे नाराचविच्छिन्ने कुर्याद्भिन्नेऽथवा पथा। वीथ्यन्तरे वा मृतके हरेरर्चां समाचरेत्। अनाथानुपनीतानां प्रेतायाश्च तथा स्त्रियाः। अन्तः शवस्य दोषस्तु ग्रामादौ च न लिप्यते। मुनीनां च यतीनां च परकायप्रवेशिनाम्। मरणं यत्र सम्भूतं तत्र दोषो न लिप्यते। शूद्रादीनां च मरणं सम्भवेद्यत्र कुत्रचित्। आशौचं गृहमात्रस्य ग्रामाशौचं न विद्यते॥ कुटिके पत्तने चैव खर्वटे राजधानिषु। क्रमेणैवार्चनं कुर्यादुक्तदोषो न विद्यते इति।

மற்றொரு ஸ்ம்ருதியில் :- விசேஷம் சொல்லப்பட்டுள்ளது :- 400-க்கு மேற்பட்ட ப்ராஹ்மணர்களால் நிறைந்துள்ள க்ராமத்தில் ஜபம், ஹோமம், பூஜை இவைகளைப் பற்றி விசேஷத்தைச் சொல்லுகிறேன். அந்த க்ராமத்திற்கு அந்தச் சவத்வதோஷமில்லை. அதில் ஜப ஹோமாதிகளைச் செய்யலாம். நாராசத்தால் (சிறியவழி) பிளக்கப்பட்டு, அல்லது வழியால் பிரிக்கப்பட்டுள்ள இடத்தில் செய்யலாம். வேறு வீதியில் செய்யலாம். அநாதன், அநுபநீதன், ஸ்த்ரீ இவர்களின் ம்ருதியில் அந்தச் சவத்வதோஷமில்லை. முநிகள், யதிகள், பரகாய ப்ரவேசிகள் இவர்களின் ம்ருதியிலும் தோஷமில்லை. சூத்ரன் முதலியவரின் ம்ருதியில் க்ராமாசௌசமில்லை. அந்த க்ருஹத்திற்கு மட்டில் தோஷமுண்டு. குடிகம், பதநம், கர்வடம், (நகரப் பகுதிகள்) ராஜதானீ இவைகளிலும் முன்சொல்லிய தோஷமில்லை. அர்ச்சநத்தை க்ரமப்படி செய்யலாம்

सङ्ग्रहे — अन्तःशवोऽशुचिर्ग्रामस्तत्र होमादि नाचरेत्। वीथ्यन्तरे सदा कुर्यादेकादशधनुष्परे। ग्रामे चतुः शतब्रह्म युक्तेऽप्यन्तश्शवे क्रियाः। कुर्यात् स्त्रीवृषलानाथबालार्तौ चेत्यथापरे

